# ॥ मायापञ्चकम् ॥

## மாயா பஞ்சகம்

(1)

निरुपमनित्यनिरंशकेऽप्यखण्डे
मयि चिति सर्वविकल्पनादिशून्ये ।
घटयति जगदीशजीवभेदं
त्वघटितघटनापटीयसी माया ॥

திருபமநித்ய நிரம்சகேSப்யகண்டே
மயி சிதி ஸர்வ விகல்பநாதி சூன்யே ।
கடயதி ஜகதீச ஜீவபேதம்
த்வகடித கடநா படீயஸீ மாயா ॥

நிகரற்றதும், சாச்வதமானதும், பகுதிகள் இல்லாததும் முழுமை வாய்ந்ததும் மற்றெல்லா விகல்பங்களும் நீங்கியது மான பேருணர்வாகிய என்னில் பரம்பொருளுக்கும் ஜீவனுக்கும் வேற்றுமையை தோற்றுவிக்கிறதே அதுதான் மாயை. நிகழாததை நிகழ்ந்ததாகக் காட்டுவதில் மிகத் தேர்ந்தது.

(2)

श्रुतिशतनिगमान्तशोधकान –
प्यहह धनादिनिदर्शनेन सद्यः ।
कलुषयति चतुष्पदाद्यभिन्ना –
नघटितघटनापटीयसी माया ॥

ச்ருதிசத நிகமாந்தசோதகாந
ப்யஹஹ தநாதிநிதர்சநேந ஸத்ய: ।
கலுஷயதி சதுஷ்பதாத்ய பிந்நான்
அகடிதகடநா படீயஸீ மாயா ॥

பலவாறு வேதங்களையும் உபநிஷத்துக்களையும் ஆராய்ந்து முடித்தவர்களைக் கூட தனம் முதலியவற்றைக் காட்டி ஐந்தறிவு

ப்ராணிகளைப் போன்று குழப்பத்துக்குள்ளாக்குகின்றதே அது தான் மாயை - நிகழாததை நிகழ்ந்ததாகக் காட்டும் வல்லமை படைத்தது! என்ன ஆச்சரியம்!

(3)

सुखचिदखण्डविबोधमद्वितीयं
वियदनिलादिविनिर्मितौ नियोज्य ।
भ्रमयति भवसागरे नितान्तं
त्वघटितघटनापटीयसी माया ॥

ஸுகசிதகண்ட விபோதமத்வதீயம்
வியதனலாதி விநிர்மிதே நியோஜ்ய ।
ப்ரமயதி பவஸாகரே நிதாந்தம்
த்வகடித் கடநாபடீயஸீ மாயா ॥

பேச்சுக்காகக் கூட 'வேறு' ஒன்றைக் காட்ட இயலாத சுத்தப் பேரானந்த உணர்வை, ஆகாயம், அனிலம் இவற்றில் அமைத்துக் காட்டியல்லவா ஒருவனை வெகுவாக ஸம்ஸாரத்தில் ஆழ்த்திச் சுழல வைக்கிறது இந்த மாயை! நிகழாததை நிகழ்த்திக் காட்டுகிறதே அது! என்னே அதன் வலிமை!

(4)

अपगतगुणवर्णजातिभेदे
सुखचिति विप्रविडाद्यहंकृतिं च ।
स्फुटयति सुतदारगेहमोहं
त्वघटितघटनापटीयसी माया ॥

அபகத குண வர்ண ஜாதிபேதே
ஸுகசிதி விப்ரவிடாத்ய ஹம்க்ருதிம் ச ।
ஸ்புடயதிஸுததார கேஹமோஹம்
த்வகடித கடனாபடீயஸீ மாயா॥

குணத்தினால், நிறத்தினால், ஜாதியினால் வேற்றுமை ஏதுமில்லாத சுத்த சிதானந்தத்தில் பிராமணன், வைச்யன் என்றும் 'நான்' எனது என்று மட்டுமில்லாமல், மகன், மனைவி, வீடு என்ற பற்பல மோஹங்களையுமல்லவா தோற்றுவிக்கிறது இந்த மாயை! உண்மையில் இந்த மாயை நிகழாததை நிகழ்வதாகக் காட்ட நேர்ந்ததுதான்!

(5)

विधिहरिहरविभेदमप्यखण्डे
बत विरचय्य बुधानपि प्रकामम्।
भ्रमयति हरिहरविभेदभावा –
नघटितघटनापटीयसी माया ॥

விதி ஹரி ஹர விபேதமப்யகண்டே
பத விரசய்ய புதாநபி ப்ரகாமம் ।
ப்ரமயதி ஹரிஹரவிபேத பாவான்
அகடித கடநா படீயஸீ மாயா ॥

முழுமையான சிதானந்தத்தில் பிரம்மன், விஷ்ணு, சிவன் என்றெல்லாம் வேற்றுமை தோன்றச் செய்து அறிவாளிகளையுமல்லவா குழப்பி விடுகிறது இந்த மாயை - இதன் வலிமை யாதெனில் நிகழாததை நிகழ்வதாக ஆக்குவதுதானே!

மாயா பஞ்சகம் முற்றிற்று

